# வேனல் தெரு

பதினாலாம் நூற்றாண்டு யுத்தத்தில் தப்பிய குதிரை போல வேனல் தெரு வசீகரமாக வாலை ஆட்டி அழைத்துக் கொண்டிருந்தது. நீண்ட உருவங்களாகவும் தோற்றம் கலைவுற்றவர்களாகவும் குடிகாரர்கள் கடந்துகொண்டிருந்தனர். வேனல் தெருவின் இரு பக்கமும் நீண்ட வரிசையாக மதுக் கடைகளே நிறைந்திருந்தன. கண்ணாடிக் குடுவைகளில் தேங்கிய மது தன் நீள் தொடு கொம்புகளால் பார்ப்பவரின் கண்களைச் சுருட்டி அழைத்துக்கொண்டிருந்தது. நகரின் தொல்பழமையான இந்தத் தெருவின் இமைகள் இரவுபகல் பேதமின்றி சிமிட்டிக் கொண்டிருந்தன. வயதை மறந்த குடிகாரர்கள் தங்களை மீறி சிநேகித்துக் கொண்டும், பரஸ்பர அன்பில் கட்டுப்பட்டவர்களாக நேசம் மட்டுமே வழியும் மதுக் குடுவையுடன் விடாது பேசியபடியிருக்க எரிந்துகொண்டிருக்கும் ஒன்றிரண்டு குண்டு பல்புகளுக்கு ஊடே பெண்களும் கூடக் கபடின்றி சிரித்தபடி முக்காடு விலக்கிக் குடித்துப்போகின்றனர். போதை ததும்பிய வென் கனவிலே உருக்கொண்டது போல வியாபித்திருக்கிறது வேனல் தெரு. மனிதர்கள் மதுவுடன் தங்கள் ஆகிருதிகளைக் கரைத்துவிட்டு திரவம் போலாகி மதுப் புட்டியினுள் சேகரமாகிவிட முயன்று கொண்டிருந்தனர்.

நீண்ட தாடியும் கருத்த ரம் புட்டியுமாக நிற்கிறாரே, அதோ கூட்டத்தின் கடைசியில், அவரிடம் கேளுங்கள். தனது விநோதக் கனவுகளில் நூறு நடிகைகளைக் காதலித்துத் தோற்ற கதை அவரிடம் ஒரு சுருள் பூச்சியாக ஆயிரம் கால் கொண்டு ஊர்ந்து கொண்டிருக்கிறது. என்றோ இறந்துபோய்விட்ட எல்.பி. வனமோகினிக்காகத்தான் அவர் இப்போது மது அருந்திக் கொண்டிருக்கிறார். இருபது வயதுக்குள் எண்ணற்ற நடிகர்களால்

காதலிக்கப்பட்டு, எவரையும் வெறுக்கத் தெரியாமல் சுயமரணம் செய்து கொண்ட அந்த நடிகையின் சுருள் கூந்தல் இழையொன்று மதுவின் வழியே தன் மீது படர்வதாகவே அவர் நினைத்துக் கொள்கிறார். எல்.பி. வனமோகினியை அவர் நேரில் கண்டவரில்லை. யாரோ தந்த சினிமா புகைப்படத் தாளில் சுழித்த உதட்டுடன் இருந்த அவள், நரி ஒன்றைத் தன்னோடு அணைத்துக் கொண்டிருந்தாள். நரியே அவளைக் காதலிக்கச் செய்தது. இந்த நூற்றாண்டின் இரண்டாம் பத்தில் இறந்துபோனாள் வனமோகினி. என்றாலும் என்ன? அவளை உயிருடன் எழுப்பும் மதுப் புட்டிகள் அவரிடம் இருந்தனவே. அவரின் மனத்தில் அன்பின் சிறு துவாரங்களின் வழியே தீர்க்க முடியாத துக்கம் சுரந்துகொண்டிருக்கிறது. அன்பே துக்கத்தின் துளிதானோ? உலகில் வனமோகினியின் காலம் இன்னும் எத்தனை நூற்றாண்டு களுக்கு இருக்கும்? அவரிடமிருந்து தேவைப்படுமாயின் மதுவை நீங்களும் பெற்றுக்கொள்ளலாம்.

இன்று அவரிடமிருந்த மதுப் புட்டியைப் பிடுங்கிக்கொண்டு அவரை மிதித்துத் தள்ளியபடி நகர்கிறானே அந்த இளைஞன், அவன் பெயர் என்னவாயிருக்கும்? வேனல் தெருவுக்குள் வருபவர்கள் எவராக இருப்பினும் பெயர் ஒன்றுதானே? இளைஞன் தன்னிடமிருந்த சில்லறைகளைத் தெருவெங்கும் வீசி இறைக்கிறான். எவனோ ஒரு கடைக்காரன் தன்னிடம் சில்லறை யில்லை என எந்த ஊரிலோ மறுதலித்ததின் பதிலாக இங்கே சில்லறைகள் வீசுகிறான். பின்பு மெதுவாகத் தன்னிடமிருந்த நூறு ரூபாய் தாளைச் சுருட்டிச் சுருட்டி அதன் முனையில் நெருப் பிட்டு புகைக்கிறான். அவனைப் பார்த்து யாரோ சிரிக்கிறார்கள். ஏழாம் நம்பர் கடை மூலையில் இருக்கும் இருவர்தானே சிரித்தது. அவர்களில் ஒருவனுக்குப் பணத்தை புகைப்பவனிடமிருந்து ஒரேயொரு தம் அடிக்க ஆசை எழ, கால் பின்னிய நிலையில் எழுந்து வந்து அவனிடம் தம் கேட்கிறான். வந்தவன் உதட்டிலும் பணத்தின் நீலநிறம் ஒட்டிக் கொள்கிறது. இருவரும் புகைக் கிறார்கள். அவர்களுக்குள் ஏற்பட்ட புதிய நட்புக்காக இருவரும் ஒரே மதுக் கோப்பையைப் பகிர்ந்துகொள்கிறார்கள். கோப்பை காலியானதும் இருவருக்குள் விரோதம் தொடங்குகிறது.

தனது பணத்தைப் பிடுங்கிச் சுருட்டிப் புகைத்து விட்டான் என வந்தவனுக்கு எதிராகக் கூச்சலிடுகிறான் இளைஞன். ஏழாம் கடைசியில் இருந்தவனோ தன்னுடன் இருந்த நண்பன் எவன்

என அறியாது மற்றொருவன் தோளில் சாய்ந்துகொண்டு உறவை விளித்து மாப்ளே... மாப்ளே எனச் செல்லமிடுகிறான். இத்தனை குடிகாரர்களுக்கும் நடுவில் சிதறிய நாணயங்களைக் குனிந்து அவசரமும் ஒடுக்கமுமாகப் பொறுக்கிக் கொண்டிருக்கிறாளே அந்த செங்கிழவி, அவளை விடவும் திருடக் கூடியவர் இந்த வேனல் தெருவில் எவரும் கிடையாது.

நாணயங்களைக் குனிந்து சேகரித்தபடியே அவள் கால் செருப்பு களைத் திருடி ஒளிக்கிறாள் பாருங்கள். அவள் உடைந்த குப்பி களுக்குள் நாணயங்கள் சிதறுகின்றன. அவள் தன் வாய் அகன்ற மதுப் புட்டியில் நாணயங்கள் போட்டுக் குலுக்குகிறாள். அது தான் எத்தனை இனிமையாகச் சப்தமிடுகின்றன. நாணயங்கள் நிரம்பிய மதுபுட்டியுடன் வேனல் தெருவில் இருந்த இருள் சந்தில் போகிறாள். அங்கும் சிலர் குடித்துக்கொண்டுதான் இருக் கிறார்கள். அவர்கள் நிலத்தோடு உரையாடிக்கொண்டிருப்பது போல முணுமுணுக்கின்றனர். விலை மலிந்த சாராய வீதி அந்த இருள் சந்து. தகரக் குவளைகளில் மஞ்சள் சாராயம் மினுக்கு கிறது. செங்கிழவி தன் மதுப் புட்டியை ஒரு தகரக் குவளையில் கொட்டுகிறாள். மிச்சமான சாராயத்தில் ஊறுகின்றன நாணயங்கள். தங்கத்தைப் போன்ற வசீகரமான அத்திரவத்தை அவள் உதடு தீண்ட விரிகின்றது. ஒரு வான்கோழியைப் போலச் சப்தமிட்டபடி அவள் குடித்துவிட்டுத் தகரக் குவளையைத் தருகிறாள். அவளுடைய வயது மெல்லக் கரைந்து மீண்டும் பால்யம் கண்டவள் போல தனது மார்புகளை சாராயக்காரனிடம் காட்டி இச்சை மொழியில் பேசுகிறாள். அவனோ கிழட்டு நாயே என ஏசியபடி மீண்டும் தகரக் குவளையில் சாராயம் தருகிறான்.

இனி இரவு முழுவதற்கும் வேறு கிடைக்காது என்பது தெரியும். நீண்ட கயிற்றால் காலி மதுப் புட்டியை இடுப்பில் சுற்றி நாணயம் தேடி அலையத் தொடங்குவாள். வேனல் தெருவுக்கு எல்லா இரவும் மது வாங்க வரும் பக்கீர் வந்திருக்கக் கூடும். அவரது மிகப் பெரிய மோட்டார் சைக்கிள் ஓசையைக் கேட்டதும் கிழவி ஓடுகிறாள். பக்கீர் என்றைக்கும் போலவே இரண்டாம் கடை முன் நிற்கிறார். அவருக்கு உரியதைப் பெற்றுக்கொள்கிறார். இளம் பெண்ணைப் போல அவரை உரசி சிரிக்கிறாள் செங் கிழவி. அவர் வண்டியில் அமர்ந்தபடி எல்லா நாளையும் போலவே தனது இடது காலால் அவளை உதைத்துத் தள்ளிவிட்டு ஐந்து ரூபாயை எறிந்து புறப்படுகிறார். அதை எடுக்க மனம்

அற்றவளாக அவரின் மனைவிகளைப் பற்றிய வசைகளைப் பெருக்கியபடி நிற்கிறாள். அந்தப் பணம் இரவெல்லாம் எவராலும் எடுக்கப்படாமல் அந்த இடத்தில் கிடக்கும். விடிந்த பின்பு அதை அவளே எடுத்துக் கொள்ளக் கூடும். ஆயினும் இரவில் அவள் அதன் மீது மூத்திரம் பெய்வதையோ, காறி உமிழ்வதையோ எவர் தடுக்க முடியும்? வழியற்ற ஒருவன் அப்பணத்தை எடுத்த நாள் ஒன்றில் கிழவி அவன் உடைகளை அவிழ்த்துவிட்டு ஆடையற்ற அவன் உறுப்பில் புட்டியால் அடித்திருக்கிறாள் என்கிறார்கள். எனினும் புறக்கணிக்கப்பட்ட பணம் வெறும் காகிதமாக இருளில் வீழ்ந்து கிடக்கும்.

வேனல் தெருவுக்குப் புதிதாக வந்த அந்தப் பையனைப் பாருங்கள். இப்போதே மீசை அரும்பத் தொடங்கியிருந்த அவன், எதிர் வீட்டில் குடியிருந்து வேறு ஊருக்கு மாற்றலாகிப் போன மாணவிக்காகவும் தன் முதற்காதலுக்காகவும் மதுப் புட்டியைத் திறக்கிறான். அவனிடம் சொல்லவொண்ணாத காதல் இருக்கிறது. தோற்றுப்போன தன் முதல் காதல் பற்றி யாரிடமும் பேச முடியாத தவிப்பில் அவன் கடைசியில் தன்னிடமே பேச முயலுகிறான். தன்னிடம் பேசுவதை விடவும் வேறு எவர் கிடைக்கக் கூடும் நல்துணை. அவனுக்குக் குடிக்கத் தெரியாமல் இருக்கக் கூடும். ஒருவேளை மது அவனை வீட்டுக்குத் திரும்ப விடாமல் ஏதோ ஒரு தெரு இருளில் விழச் செய்யக் கூடும். ஆனாலும் அவனுடன் பேசுவதற்கு வேறு வழிதான் என்ன இருக்கிறது? குடிப்பதன் மூலம் தவிர தன்னை நேசித்துக்கொள்ள வேறு பாதைகளை யார் அவனுக்குக் கற்றுத் தரக் கூடும். அவன் கறுப்புத் திரவம் ஒன்றை வாங்கியிருக் கிறான். அத்திரவம் அவன் உடலில் கண்ணாடி இதழ்போல நீர்த் தட்டானின் சிறகை விடவும் மெல்லியதாக இரு சிறகுகளைக் கிளைவிடச் செய்யும். இதை நினைத்தபடியே குடிக்கிறான். பனை விசிறியைப் போல வடிவம் கொண்ட அந்தச் சிறகு அருகில் குடித்துக்கொண்டிருப்பவன் கண்ணுக்குக் கூடத் தெரிகிறது. அவனுள் மிதந்து கொண்டிருந்த திரவம் மாற்றலாகிப் போன பெண்ணின் சுவடுகளைப் பற்றிச் சென்று தெரியாத ஊரில் உறங்கும் அவள் வெண் பாதங்களை முத்துகின்றன. அவன் இப்போது அந்தப் பெண்ணையே குடித்துக்கொண்டிருக்கிறான். புட்டியில் ஒரு துளி திரவமும் இல்லாமல் தீர்த்துவிட்டான். நீர்மை படர்ந்த கண்களுடன் தன் முதல் காதலைப் பற்றி தன்னிடமே பேசிக்கொள்கிறான். விசும்பலும் ஏக்கமும் ஊர்கின்றன

உடலெங்கும். சக குடிகாரன் ஒருவன் அவனை நோக்கி தன் கைகளை விரிக்கிறான். கரங்களின் ஊடே நுழைந்த மாணவனை முத்தமிடுகின்றன பெரு உதடுகள். மாறி மாறி முத்தமிட்டுக் கொள்கிறார்கள். பின் இருவரும் தோளில் கை போட்டபடி அடுத்த மதுக் கடைக்குப் போகிறார்கள். அவர்களை இடித்துக் கொண்டு போகும் நபர் பையனின் நல்லாசிரியராக இருக்கிறார். எனினும் என்ன? இரவின் ரகசியப் படிக்கட்டுகளின் வழியே உலவும் குடிகாரர் அவரும்தானே. காலி மதுப்புட்டிகளில் விரல் நுழைத்துத் துழாவும் குருடன் செபாஸ்டியன் புட்டிகளில் மிஞ்சிய மதுவைத் துளித்துளியாகத் தன் சிரட்டையில் சேகரிக்கிறான் பாருங்கள். எவனோ குடித்து மீதம் வைத்துப் போன பாதி புட்டி ஒன்றால் சிரட்டையே நிரம்பிவிடுகிறது. இனி அவனை விடவும் யோகமும் சந்தோஷமும் கொள்ளக் கூடிய மனிதன் எவனிருக் கிறான். வேனல் தெரு இடிந்த மூத்திரப் பிறையின் படிக்கட்டில் அமர்ந்தபடி அவன் இரவு உணவையும் சிரட்டை மதுவையும் ருசித்துக் குடிக்கிறான். பகல் முழுவதும் கூவி பெற்ற நாணயங் களையும் மனிதர்களையும் மறந்துவிட்டு, தான் கண் பார்த்து அறியாத வேனல் தெருவின் வாசனையை முகர்ந்தபடிக் களிப்புறுகிறான். சந்தோஷம் ஒரு சல்லாத் துணி போல உடல் மீது படர்கிறது. தன்னிடமிருந்த பீடியைப் புகைக்கத் தொடங் கியதும் உலகம் ஏன் இத்தனை சந்தோஷமாகவும், இடைவிடாத களிப்பையும் கொண்டிருக்கிறது என எண்ணிக் கொண்டான். ஸ்திரிகளையும் வீட்டையும் மறந்த வேனல் தெரு மதுக்குடியர் களுக்குள் மட்டும் எப்படி வற்றாமல் களிப்பு பீறிடுகிறதோ எனப் புரியவேயில்லை. கசப்பு முளைத்த நாவுடன் அவர்கள் உலகின் மொத்தக் களிப்பையும் திருடி வந்து விட்டார்களா என்ன? வேடிக்கையும் உல்லாசமும் நிரம்பிய அத்தெருவுக்குள் குற்றம் என எதைச் சொல்லிக்கொள்ளக் கூடும். திறந்த இரவினுள் குற்றங்கள் நிழலைப் போலச் சப்தமிடாதபடியே உலவுகின்றன.

பண்டிகை நாள் தவிர வேறு காலங்களில் ஒப்பனையற்றுப்போன ஸ்திரிபார்ட்காரன் ஒருவன் மட்டும் குடியில் குரல் உயர்த்திப் பாடாமல் இருந்திருந்தால் உல்லாசத்தில் இந்த லயம் இருந்திருக்கக் கூடுமா? அவனுக்குப் பெண்களை விடவும் அடர்ந்த கூந்தல். ஸ்திரி முகம் கொண்ட அவன் வேனல் தெருவுக்குக் குடிப்பதற்கு ஒருபோதும் தனியே வருவதே யில்லை. ஒரு ஆட்டுக்குட்டியை மார்போடு அணைத்து எடுத்துக் கொண்டு வருவான். கற்பனையான உபவனத்தில் தோழியோடு

அலையும் ராணியைப் போல நடக்கிறான். அவனுடைய் தோளில் சரசரக்கும் தலைமயிர் குடிப்பவர்களுக்குள் சரசத்தின் மூச்சைக் கிளப்பிச் செல்கிறது. வேஷமிடாதபோதும் அவனால் ஸ்திரிபார்ட்டினின்று தப்பிக்க முடியவில்லை. பொய் மார்பகமும் உயர் கொண்டையும் அணியவில்லையே தவிர, அவன் முகத்தில் மஞ்சள் திட்டுகளும், கைகளில் வளையும் சப்தமிட வருகிறான். அவனுடைய ஆட்டுக்குட்டி துள்ளி குடிகாரர்களின் ஊடே அலைகிறது. ஆட்டின் கழுத்தில் புரளும் ஒற்றை மணிச் சப்தம் கேட்ட குடிகாரன் எவனோ தங்களுக்குக் குடிப்பதற்காக வாங்கிய புட்டியுடன் இருளில் மறைகிறான். ஆட்டின் கண்களில் பழகிய போதையின் சுகிப்பு தெரிகிறது. அவனும் ஆடுமாகக் குடிக்கிறார்கள். இருவரும் இரவெல்லாம் குடிக்கக் கூடும். குடித்த ஆடுகள் எப்போதும் இயல்பிலே புணர்ச்சிக்கு ஏங்குகின்றன. அவை மனித பேதமறியாது கால்தூக்கி நிற்கின்றன. நள்ளிரவு வரை அவர்கள் பேசிக் கொண்டே இருக்கிறார்கள். ஆடு வேனல் தெருவினின்று கிளம்பி அவர்கள் மஞ்சள் அழியும் உலர்ந்த வீதிகளில் காகிதத்தை மென்றபடி அலையத் தொடங்குகிறது. மூடிய வீடுகளுக்கு வெளியே முரட்டுக் குடிகாரனைப் போல ஆடு மணியசைத்துச் சுழல்கிறது. தடுக்க யார் இருக்கிறார்கள். உல்லாசம் தெருவில் தனியே நடனமிடுகிறது என்பதைத் தவிர.

வேனல் தெரு மதுக் கடைகள் மூடப்படுவதேயில்லை. கடைகளுக்குக் குடிக்க வருபவர்கள் மட்டுமல்ல, கடையில் இருக்கும் விற்பனை செய்யும் நபர்களே கூட ஒரே முகச் சாயலில் தானிருக்கிறார்கள். அவர்களுள் நான்காம் கடைச் சிப்பந்தியின் கண்கள், புட்டிகளை வாங்கும் எல்லா மனித முகத்தையும் துளையிட்டு அறிந்துவிடுகின்றன. மதுக் கடைச் சிப்பந்திகள் சில்லறை தராமல் ஏமாற்றும்போதோ, கள்ள மதுவை விற்கும் போதோ கூட குடியர்கள் ஏன் எதிர்பார்ப்பதில்லை. வேனல் தெரு இரவு எப்போதும் அரை மயக்க நிலையிலேயே இருக்கிறது. பொருள் வழி அலையும் வியாபாரிகளும், பயணிகளும் இதனுள் நுழையாமல் செல்ல முடிவதேயில்லை. தனது குறிப்பேட்டில் யாரோ பயணியின் கைகள் தெருவின் ஞாபகத்தினை எழுதத் தாக்குகின்றன. பின் அவனும் களைத்து விடுகிறான். நேற்றாக இருக்கலாம், குடிக்க வந்தவர் இருவர் நெடும் காலத்தின் பின் சந்திப்பு கொண்டு நினைவைப் பரிமாறியபடி குடித்தனர். அவர்கள் பர்மாவிலிருந்து நடந்து வந்தவர்கள் எனத் தெரிகிறது.

மதுப் புட்டிகள் காலியாகியபடி இருந்தன. பின் இருவரில் மூத்தவன் மதுப் புட்டியை உயர்த்தி அதனுள் பர்மா மூழ்கி யிருப்பதாகக் கூறுகிறான். திரவம் மெல்ல வடிய பர்மா நகரம் கண்ணாடி மீறி விரிகிறது. இருவரும் யுத்தத்தின் முந்திய மர வீடுகளின் சாலையில் நடக்கின்றனர். ஜப்பானிய விமானங்களின் குண்டு நகர் மீது சிதறுகிறது. தெருக்களுக்குள் ஓடுகிறார்கள். துப்பாக்கி ரவை எட்டாத வெளியில் பயணித்து நடந்தபோது ஒருவன் மற்றவனை நோக்கித் துப்பாக்கியை நீட்ட, தோட்டா பீறிட்டு முதுகில் பாய்கிறது. விழித்துக்கொண்டவனைப் போல குடிப்பவன் கண்ணாடி புட்டியைத் தூக்கி உடைக்கிறான். பர்மா சிதறுகிறது. சுட்டுக்கொண்டது யார் யாரை எனப் புதிர் விலகாமல் சொந்தத் துயரத்துக்காக மீண்டுமொரு மதுப் புட்டி வாங்க நடக்கின்றனர்.

இரவு நீள நீள மயங்கிச் சரிந்த சாயைகளின் நடமாட்டம் ஓய்ந்த பின்பும் வேனல் தெரு விழித்தபடிதானிருக்கிறது. என்றோ இந்த நகரையாண்ட வெள்ளைப் பிரபுவின் குள்ளமான சிலையைப் பாருங்கள். அதன் கண்கள் கூட இந்தத் தெருவைப் பார்த்தபடி தானிருக்கின்றன. பிறந்த தேசம் விட்டுக் கனவுக் கப்பலில் மிதந்தபடி அந்த துரை இந்நகரை நன்றாக அறிந்திருந்தான். அந்தச் சிலையின் கீழே உளறுகிறானே ஒருவன், அவன் எதைத்தான் பேசுகிறான். காதில் விழுகிறதா? என்றோ மழை வெறித்த நாள் ஒன்றில் சிவப்புக் குடையுடன் வந்த இரண்டு சட்டைக்காரப் பெண்கள் கண்ணீர் மல்க, அந்தச் சிலையின் முன்பாக மவுனித்து விட்டு ரோஜா மலர்களை அங்கு விட்டுச் சென்றனரே அன்றும் அவன் அங்கு குடித்துக்கொண்டிருந்தான். ரோஜா மலர்கள் வேனல் தெரு மதுக்குடியர்களைப் பேச்சற்றுப் போகச் செய்தது. மதுக்கடைக்காரர்களுக்கு அந்த ரோஜாக் களைப் போலக் குற்ற உணர்வை ஏற்படுத்தும் எந்தப் பொருளும் இதுவரை உலகில் இருந்ததாக நினைவில்லை. இருபத்தி எட்டு மதுக் கடைச் சிப்பந்திகளும் ரோஜாக்களை எவராவது எடுத்துப் போய்விட வேண்டும் என ஆசைப்பட்டார்களே அன்றி எவனும் கீழ் இறங்கி அந்த ரோஜாக்களை எடுத்து எறிய இயலவில்லை. பதினாலாம் கடைச் சிப்பந்தி ஒருவன் தன் ஆறு வயது மகள் ஞாபகம் பெருகி வர, மைல்களுக்கு அப்பால் உள்ள கிராமத்து வீட்டின் கதவுகளைத் தட்டி முகம் பார்க்க ஆசையுற்றுப் புலம்பினான். அவனாலும் இந்த ரோஜாக்களை எடுத்துவிட முடியவில்லைதானே. மூன்று நாட்கள் வரை அதே இடத்தில்

காய்ந்து, சருகாகிய நிலையில் ரோஜாக்கள் இருந்தன. பின் காற்று அதைத் தன்னோடு கூட்டிப்போனது. காற்றில் மறைந்துவிட்ட ரோஜா ஏற்படுத்திய வெறுமை கடைச் சிப்பந்தி ஒருவனுக்குத் தாளாமல், அவன் வீதியினின்று சுழித்து ஓடி, நகரை விட்டுப் புலம்பி ஓடுகிறானே அது எதற்காம்? விசித்திரம்தான் மனிதர்களாக உருக்கொண்டு இங்கு வருகின்றதா என்ன?

மழிக்கப்படாத மயிர் படர்ந்த முகத்துடன் ஒருவன் எல்லா மதுக் கடைகளிலும் இரைஞ்சும் குரலில் பணத்தை வைத்துக்கொண்டு கேட்டும், எவரும் இல்லையென தலையாட்டுகிறார்களே தெரிகிறதா? அவனுக்கான மதுப் புட்டிகள் உலகில் இல்லாமல் தீர்ந்துவிட்டனவா? அவன் குடிப்பதற்காக எதையும் கேட்பதாகத் தெரியவில்லை. அருகில் வந்து அவன் குரலைக் கேளுங்கள். வேறு ஏதோ ஒரு பொருளுக்காக மன்றாடுகிறான். படர்ந்த மீசையில் கண்ணீர் துளிர்த்து நிற்க அவன் வேதனையுடன் எதைத்தான் கேட்கிறான்? நேற்றுதானோ இல்லை வருடத்தின் முன்பாகவோ ஏதோ ஒரு மதுக்கடையில் அவன் இறந்துபோன மனைவியின் கல்யாணப் பட்டுப் புடைவையொன்றை விற்றுக் குடித்துப் போயிருக்கிறான். அந்தப் புடைவையின் ஒரு முனை தீயில் எரிந்துபோயிருக்கும் என்பதும் அதைச் செய்தவன் அவன் என்பதையும் யார் அறிவர்? எல்லா மதுக்கடைக்காரர்களும் அவனையறிவர். புடைவை என்றில்லை, கடிகாரங்கள், நிலைக் கண்ணாடி என எத்தனையோ விற்றுக் குடித்துப் போயிருக் கிறான். அந்தப் புடைவையை அடைந்தவன் எக்கடையின் சிப்பந்தி எனத்தான் தெரியவில்லை. அவனது பரிதாபம் தாங்காது சக குடிகாரன் ஒருவன் விடாது பேசுகிறான். ஒரு சிப்பந்தி அவனைக் கூப்பிட்டு குடிகாரர்கள் விற்றுப்போன பொருட்களின் சேகர அறையைத் திறந்து காட்டுவதாகக் கூறுகிறான். அந்த அறையினுள் புடைவைகள், மரக்கண்ணாடிகள், கடிகாரங்கள், மணல் குடுவைகள், பழம் துப்பாக்கி, இசைத்தட்டுகள், புகை பிடிக்கும் குழல், கோப்பைகள், தைல ஓவியம் எனக் குவிந்து கிடக்கின்றன. தன் மனைவியின் புடைவையைத் தேடிச் சலிக்கிறான். என்றோ அடைமானத்தில் வைக்கப்பட்டுப்போன சித்திரக்காரனின் இதயம் ஒன்று மிக மெதுவாகத் துடித்துக் கொண்டிருந்தது அறையில். அந்த அறையை விட்டு அகலாது ஆறு நாள்கள் புடைவையைத் தேடிக் கொண்டிருந்தான். பின்னொரு நாள் வெளிறிய முகத்துடன் மனைவியின் புடைவையை நெருப்பிட்டு எரித்துச் சாம்பலாக்கி குடித்தவன்

நானே எனக் கூறி தெரு கடந்து சென்றான். கடைச் சிப்பந்திகள் அறிந்திருக்கிறார்கள். குடிகாரர்கள் எதையும் நினைவில் வைத்துக்கொள்வதேயில்லை என்பதை.

வேனல் தெரு என்பதே ஒரு கண்ணாடிக் கூண்டுதான் போலும். இங்கே வருபவர்கள் மதுவால் மட்டும் போதையாடுகிறார்கள் என எவராலும் தீர்க்கமாகச் சொல்ல முடியாது. விசித்திரம் ஒரு மோதிரமென இவர்கள் விரல் சுற்றிக்கொள்ள உறக்கமற்று அழித்துவிடக் குடிக்கிறார்கள். வாகனங்கள் ஊர்ந்து அலையும் நகர வீதியில் கூக்குரலிட்டு வெறியுடன் ஒருவன் நீட்டுகிற கத்தியின் பரப்பில் வேனல் தெரு உருக்கொண்டு விடுவதைப் பல கண்களும் அறிந்தே கிடக்கின்றன. என்றாலும் நண்பர்களே, மதுக் கடைகள் மூடப்படுவதேயில்லை. மீன்கறிகளையும் மிஞ்சிய மதுவையும் குடித்துப் பெருத்த எலிகளின் கூட்டமொன்று தெருவை கருமி பூமியினுள் இழுத்துச் சென்றுவிட முயல்கின்றன. தன் தலைமயிர் நிலத்தில் வேர் விட நூற்றாண்டுகளாக ஒருவன் இத்தெரு நடுவில் வீழ்ந்து உறங்கிக் கொண்டேயிருக்கிறான். அந்த மனிதன் விடுபட்டுப்போன சீன யாத்திரிகர்களில் ஒருவன் எனச் சொன்னால் நம்புவீர்களா நீங்கள்?